


# இரண்டாவது

# உலகத் தமிழ்க் கருத்தரங்கு

(1968 சனவரி 3 முதல் 10 வரை)

சென்னை, இந்தியா

---

## பொது அரங்கு

---

# சங்க இலக்கிய அறிமுகம்

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், இந்தியா

# சங்க இலக்கிய அறிமுகம்

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்
அண்ணுமலைப் பல்கலைக் கழகம், அண்ணுமலை நகர், தமிழ்நாடு, இந்தியா

—o—

இற்றைக்குச் சற்று ஏறத்தாழ 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலம், சங்க காலம் என்று கூறப்படுகின்றது. இக்காலத்தில் வாழ்ந்த புலவர்கள், சங்கப் புலவர்கள் எனக் குறிக்கப்படுவர். இவர்களால் இயற்றப் பெற்ற நூல்கள் சங்க நூல்கள் எனப் பெயர் வழங்கப்பெறும். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, திருக்குறள் என்பன, சங்க நூல்கள் என்று கூறப்படும். அவற்றுள் எட்டுத்தொகையில் அடங்கிய நூல்களிலும், பத்துப்பாட்டிலும் உள்ள செய்திகளைப் பற்றிப் பொது நோக்காக இக்கட்டுரையிற் காண்போம்.

எட்டுத்தொகையில் அடங்கிய நூல்கள் எட்டின் பெயர்கள்: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பனவாகும். பத்துப்பாட்டில் அடங்கிய பாட்டுக்கள் பத்தின் பெயர்கள்: திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பனவாகும். இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்கள் நான்கிலும் ஒவ்வொன்றிலும் தனித்தனி நானூறு செய்யுட்களும், ஐங்குறுநூறு நூற்றில் ஐந்நூறு செய்யுட்களும், கலித்தொகையில் நூற்றைம்பது செய்யுட்களும் உள்ளன. பதிற்றுப்பத்து, நூறு செய்யுட்களை உடையது எனினும் அவற்றுள்

இப்போது கிடைப்பவை, எண்பது செய்யுட்கள் ஆகும். பரிபாடல், எழுபது செய்யுட்களை உடையது எனினும் அவற்றுள் இப்போது கிடைப்பவை, இருபத்திரண்டு முழுப் பாடல்களும், பழைய உரைகளிலும், புறத்திரட்டு முதலிய நூல்களிலும் காணப்படும் இரண்டு முழுப் பாடல்களும், சில உறுப்புக்களும் ஆகும்.

இந்நூல்களிற் கூறப்படும் செய்திகள், அகப்பொருள், புறப்பொருள் என இரண்டு வகைப்படும். மக்களின் வாழ்க்கை முறைகள் அனைத்தும் இவ்விருவகைப் பொருள்களில் அடங்கும். இப்பொருள்களின் இலக்கணம், தொல்காப்பியம் முதலிய நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பிற மொழியாளர்கள், எழுத்தும் சொல்லும் பற்றியே தம்முடைய மொழிகளுக்கு இலக்கணம் வகுத்துள்ளனர். ஆனால் தமிழ் மொழியில், இலக்கியத்தில் அமையும் இவ்விருவகைப் பொருள்களுக்கும் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. இது, தமிழ் மொழிக்கே உரிய சிறப்பியல்பாகும்.

அகப்பொருள் என்பது, மக்களது உள்ளத்து உணர்ச்சியாகிய இன்ப அன்பின் வயப்பட்ட குடும்ப வாழ்க்கை பற்றிய செய்திகளைக் கூறுவது ஆகும். இதனை எடுத்துரைக்கும்போது, ஒருவனுக்கும், ஒருத்திக்கும் இடையே ஏற்படும் அன்பும், அதுபற்றிய உணர்ச்சிகளும், நிகழ்ச்சிகளும் விளக்கிக் கூறப்படும். இன்ப நுகர்ச்சி, அதனை நுகர்ந்த ஒருவனும் ஒருத்தியும் ஆகிய இருவரின் உள்ளங்களுக்கு மட்டுமே புலனாதலால், இது, அகம் எனப் பெயர் பெற்றது. இவ் இன்ப நுகர்ச்சி பிறர்க்குப் புலனாகாமல் மறைக்கத் தக்கது ஆதலால், இது, அகம் எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர். புறப்பொருள் என்பது, அறம் செய்தலும், பொருள் ஈட்டுதலும், போர் புரிதலும் முதலிய சமுதாய வாழ்க்கை பற்றிய செய்திகளைக் கூறுவது ஆகும். இவற்றின் பயன், எல்லோர்க்கும் உரியது. இது, பிறர்க்குப் புலனாதலின், புறம் எனப் பெயர் பெற்றது. இது பற்றிய உணர்ச்சி, பிறர்க்குக் கூறத்தக்கது ஆதலால், இது, புறம் எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

மேற்குறிப்பிட்ட நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்னும் நூல்கள் ஐந்தும் அகப்பொருள் பற்றியன. பரிபாடல், அகப்பொரு

ளும் புறப்பொருளும் பற்றியது. புறநானூறும், பதிற்றுப் பத்தும் புறப்பொருள் பற்றியன. பத்துப்பாட்டில் அடங்கிய பாட்டுக்களில், முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப் பாலை என்னும் மூன்றும் அகப்பொருள் பற்றியன. நெடுநல் வாடையும் அகப்பொருள் பற்றியது எனினும் இப்பாட்டில், பாண்டியருடைய அடையாளப் பூவாகிய வேம்பு குறிக்கப் பெற்றிருத்தலால், இது அகப்பொருட் பாட்டு ஆகாது என்பர். ஏனைய பாட்டுக்கள் ஆறும் புறப்பொருள் பற்றியன.

## அகப்பொருட் செய்யுட்களின் இயல்புகள்

மக்களின் பண்பாட்டிற்கு அடிப்படையானது இயற்கை என்பதனைச் சங்க கால மக்கள் நன்கு அறிந்திருந்தார்கள். அதற்கு ஏற்ப நிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை[1] என ஐந்து வகையாகப் பிரித்து உணர்ந்தார்கள். இப் பாகுபாடு தமிழுக்கே உரியது. அகப்பொருள் இலக்கி யங்கள், இப் பாகுபாட்டினை முழுதும் பின்பற்றி அமைந்துள் ளன. இவ் ஐந்து வகை நிலங்களுக்கும் தனித்தனியாக உரிய காலங்களும், கருப்பொருள்களும், உரிப்பொருள்களும் அகப் பொருள் பற்றிய இலக்கண நூல்களிற் கூறப்பட்டுள்ளன. இந் நிலங்களும், இந் நிலங்களுக்கு உரியனவாகக் கூறப்பட் டுள்ள காலங்களும் முதற்பொருள்கள் என்று கூறப்படும். இவை, உயிர் வாழ்க்கைக்கு உரிய அடிப்படைப் பொருள்கள் ஆதலின், முதற்பொருள்கள் எனப்பட்டன. நிலமும் கால மும் ஆகிய இம் முதற்பொருள்களின் சார்பினால் உண்டாகும் புல் முதல் மக்கள் ஈறாக உள்ள உயிர்ப்பொருள்களும், உயிர்ப் பொருள்கள் அல்லாத பிற பொருள்களும் கருப்பொருள்கள் என்று கூறப்படும். இவை மேற்கூறிய முதற்பொருள்களை இடமாகக் கொண்டு தோன்றுவன ஆதலின், கருப்பொருள் கள் எனப்பட்டன. ஐந்து வகை நிலங்களுக்கும் உரிய மக்க ளின் ஒழுக்கங்கள், உரிப்பொருள்கள் எனப்படும். இவை,

1. முல்லை - காடும் காடு சார்ந்த இடமும்
குறிஞ்சி - மலையும் மலை சார்ந்த இடமும்
மருதம் - வயலும் வயல் சார்ந்த இடமும்
நெய்தல் - கடலும் கடல் சார்ந்த இடமும்
பாலை - முல்லையும் குறிஞ்சியும் வெப்ப மிகுதியால் திரிந்த நிலம்.

முதற்பொருளையும், கருப்பொருளையும் பற்றுக்கோடாகக் கொண்டு நிகழும் இன்பம் பற்றிய ஒழுக்க நெறிகள் ஆகும். குறிஞ்சி நிலத்திற்குத் தலைவன் தலைவியைச் கூடுதலும், கூடுதல் நிமித்தமும், பாலை நிலத்திற்குத் தலைவன் தலைவியைப் பிரிதலும், பிரிதல் நிமித்தமும், முல்லை நிலத்திற்குத் தலைவன் பிரிந்தபோது தலைவி ஆற்றியிருத்தலும், அதன் நிமித்தமும், நெய்தல் நிலத்திற்குத் தலைவனைப் பிரிந்தபோது தலைவி இரங்குதலும், இரங்குதல் நிமித்தமும், மருத நிலத்திற்குத் தலைவி தலைவனுடன் ஊடுதலும் , ஊடுதலின் நிமித்தமும் உரிப்பொருள்கள் ஆகும். அகப்பொருட் செய்யுட்களில், மேற்குறிப்பிட்ட முதற்பொருளும் கருப்பொருளும் புலவர்களின் காட்சிப்பொருளாகவும், உரிப்பொருள், அவர்களின் கருத்துப் பொருளாகவும் அமைகின்றன. இம் முதற்பொருளும், கருப்பொருளும் ஆகிய இயற்கைக் காட்சிகளை எழிலுறப் புனைந்துரைக்கும் பகுதிகள், அகப்பொருட் செய்யுட்களில் பற்பல உள்ளன. முதற்பொருளும், கருப்பொருளும் உரிப்பொருளுக்கு அணி செய்வனவாகவும், விளக்கம் தருவனவாகவும் அமையும். முதற்பொருளும் கருப்பொருளும் இல்லாமல் அகப்பொருட் செய்யுட்களை இயற்றலாம். ஆனால் உரிப்பொருள் இல்லாமல் அகப்பொருட் செய்யுட்களை இயற்றுதல் இயலாது. எனவே, உரிப்பொருள்களே, அகப்பொருட் செய்யுட்களின் உயிர்ப்பொருள்கள் ஆகும். நிலம், காலம் என்ற முதற்பொருள்கள் இரண்டனுள் காலம் ஆகிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று வகைப் பொருள்களும் அவற்றிற்கு உரிய நிலங்கள் மாறியும் சான்றோர் செய்யுட்களில் சிறுபான்மை வரும்.

மக்களது வாழ்வில் நிகழ்ந்த பலவகை ஒழுக்கங்களுக்கும், அவர்கள் வாழ்ந்த நிலப் பகுதிகளுக்கும், ஏற்ற காலங்களுக்கும் உள்ள தொடர்புகளை நுனித்து உணர்ந்து, இன்ன நிலத்திற்கு இன்ன காலத்தில் இன்ன ஒழுக்கம் உரியது என்று வகைப்படுத்திய பைந்தமிழ்ச் சான்றோர்களின் அறிவாற்றல் பாராட்டுதற்கு உரியது. இதிலிருந்து கூடல் முதலிய ஒழுக்கங்கள், குறிஞ்சி முதலிய நிலங்களில்தான் நிகழ்ந்தன என்றேனும், நிகழ்தல் வேண்டும் என்றேனும் சான்றோர்கள் வரையறுத்துக் கூறியதாகக் கொள்ளுதல் ஆகாது. இவ் ஒழுக்கங்களின் இயல்புகளையும் எந்நிலத்தில், எக்காலத்தில்

எவ் ஒழுக்கம் நிகழ்ந்தால் அது, சிறப்பாக அமையும் என்பதனையும் உணர்ந்த சான்றோர்கள், இவ்வாறு வகுத்துக் கூறியுள்ளனர் என்பதே நாம் அறிதற்குரிய உட்கருத்தாகும்.

சுருக்கமாகச் சொன்னால், அகப்பொருள் பற்றிய செய்யுட்கள், அன்பின் வரலாறு கூறுவனவாகும். இச் செய்யுட்கள், நாடகப் பண்புடனும், சிறுகதை வடிவிலும் அமைந்து காணப்படுகின்றன. சங்க காலத்து அகப்பொருட் செய்யுட்கள், பிற்காலச் செய்யுட்கள் போலக் காதலர்களின் உடல் அழகை மிகுதியாகப் புனைந்துரைப்பன அல்ல. அவர்களின் உள்ளத்து உணர்ச்சிகளையும் பண்பு நலன்களையுமே பெரும்பாலும் புனைந்துரைப்பனவாகும்.

புறத்தே தோன்றும் காட்சிகளைப் புனைந்து சொல்லும் ஆற்றலைக் காட்டிலும் தலைவன் தலைவி முதலாயோரின் அகத்தே தோன்றும் எண்ணங்களையும், அவர்களிடையே நிகழும் பேச்சுக்களையும், செயல்களையும் உணர்ச்சியும், மெய்ப்பாடும் புலப்படப் பலவாறாகப் புனைந்து பாடும் தமிழ்ப் புலவர்களின் ஆற்றல், வியத்தற்கு உரியது. மனித உள்ளத்தில் மறைந்து கிடக்கின்ற எத்தனையோ நுண்ணிய உணர்ச்சி வகைகளை எல்லாம், இவ் இருபதாம் நூற்றாண்டு உளநூல் அறிஞரும் வியக்கும் வண்ணம் இச் செய்யுட்கள் விளக்கிக் காட்டுகின்றன. மேலும், மகளிரின் மனநிலைகளை ஆண்பாற் புலவர்களும், ஆடவரின் மனநிலைகளைப் பெண்பாற் புலவர்களும் நுட்பமாக அறிந்து கூறியிருப்பது நினைத்தற்கு உரியது. காதல் பற்றிய எண்ணங்களும், பேச்சுக்களும், செயல்களும் மறைவாக இருக்கத் தக்கனவே எனினும் அவற்றினுள் அடங்கியிருக்கும் பொதுப் பண்புகளை எல்லோரும் அறிதல் வேண்டும் என்று எண்ணியே இவற்றைப் புலவர்கள் செய்யுள் வடிவில் நமக்குத் தந்துள்ளனர். காதல் பற்றிய செய்திகளைக் கூறும் செய்யுட்களில், தலைவன் தலைவியர் பெயர் கூறுதல் ஆகாது என்னும் வரையறை தமிழ் மரபாகும். இதனை எண்ணும்போது, தனிப்பட்ட மக்களை நினையாது எல்லார்க்கும் பொதுவான ஒழுக்கத்தை உளங்கொண்டு நூல் இற்றிய தமிழ்ச் சான்றோர்களின் உயர்ந்த கொள்கை நன்கு புலனாகும். மேலும், ஒருவர் பெயரினைக் குறிப்பிட்டால், அவரைப் பற்றிய செய்யுட்கள் என எண்ணி, அவரிடத்தில் ஈடுபாடு இல்லாத சிலர், அவற்றைப் பயிலாது ஒதுக்கி விடு

தலும் கூடும். இவை, அவ்வாறன்றி எல்லாரும் பயின்று அறிவுப் பயன் துய்த்தற்கு ஏற்றனவாக இருத்தல் குறிப்பிடத்தக்கது.

ஒருவனும் ஒருத்தியும் தனியே கண்டு, தம்முள் அன்பு கொண்டு, அவ் இருவரும் கூடி ஒழுகுதலும், அவ் ஒழுக்கம் வெளிப்பட்டபின் பெண்மகளின் பெற்றோர் அவளை அவனுக்கு மணம் செய்து கொடுத்தலும், பெற்றோர், அதற்கு உடன்படாராயின், அவர் அறியாமல் அப் பெண்மகளை அவன் தன்னுடன் அழைத்துச் சென்று அவளைத் தன் மனையாளாக மணம் செய்து கொண்டு வாழ்தலும் போன்ற வாழ்க்கை முறை, தமிழ் நாட்டில் பழங்காலத்தில் இருந்தது. இம் முறைக்கு ஏற்ப அமைந்த களவு, கற்பு என்னும் இருவகை ஒழுக்கமும் தமிழ் மக்களின் வாழ்வியல் நிகழ்ச்சியாகத் தொன்று தொட்டு நிலவி வந்து, பின்பு அது புலவர்களால் அழகுற அமைத்துப் பாடப்பெற்றும், இலக்கணம் அமைக்கப்பட்டும், இலக்கிய உருப்பெற்றது என்று கருதலாம். பழங்காலம் முதல் இன்று வரை காதல், வீரம் முதலிய உணர்ச்சிகளில் மாறுதல் இல்லை என்பதும், அவைகளுக்கு உரிய சூழ்நிலைகளும், அவை நிகழும் முறைகளுமே காலத்திற்கு ஏற்ப வேறுபடுதல் கூடும் என்பதும் நினைத்தற்கு உரியனவாகும். பொதுவாக நோக்கினுல் தமிழில் உள்ள அகப்பொருள் கவிதைகள் அனைத்திலும் கற்பொடு படரும் நெறியுடைய காமமே உள் உயிராக ஒலித்துக் கொண்டிருத்தலை உணரலாம். இக் காமம் (அன்பு), மென்மையும் நுண்மையும் வியக்கத்தக்க ஆற்றலும் உடையது என்பர்.[1] இக் கருத்துக்களைப் புலப்படுத்தும் முறையில், ஐது என்னும் ஒரு சொல்லுடன்' ஐதே காமம்' எனக் குறுந்தொகையிலும்,[2] நற்றிணையிலும்[3] கூறப்பட்டிருப்பது அறிந்து இன்புறுதற்குரியது.

தொகை நூல்களில் காணப்படும் அகப்பொருட் செய்யுட்கள், ஒவ்வொன்றும் தனித்தனிக் கருத்துடையன. இவை,

---

1. காமம் என்னும் சொல், பிற்காலத்தில் இழிந்த பொருளில் கருதப்படுவதுபோல் முற் காலத்தில் கருதப்படவில்லை. காமம், காதல் என்னும் இரண்டும் ஒத்த அன்பு பற்றியனவாகவே கருதப்பட்டன.

2. குறுந்தொகை, செய்யுள், 217.

3. நற்றிணை, செய்யுள், 143.

பலரால் பாடப்பெற்றன; கருத்துக்களின் தொடர்பு கருதி இவை முறைப்படுத்தப்பட்டன அல்ல.[1] இக்கருத்துக்கள் ஒரு தொடர் நிகழ்ச்சியாக அமையுமாறு கோவைப்படுத்தப் பட்டு, ஒவ்வொருவரால் இயற்றப்பட்ட தனி நூல்களே பிற் காலத்து எழுந்த கோவைகளாகும். எனவே காதலர்களின் மனநிலைகளைத் தனித்தனிச் செய்யுட்களாகப் பாடி மகிழ்ந்த புலவர்களின் பின்வந்தோர், தொடர்ச்சியான வாழ்வு நிகழ்ச் சியில் அவைகளை இணைத்துப் பார்ப்பதில் மிகுதியான இன்பத் தைக் கண்டனர் என்பது தோன்றுகிறது. இதிலிருந்து வாழ் வியலின் நிகழ்ச்சிகளை உண்மையோடு ஒட்டித் தனித்தனி யாகக் கற்பனை செய்வதாக அமைந்த இலக்கியம், தொடர்ச்சி யாகக் கற்பனை செய்யும் அளவிற்குப் பின்னர் வளர்ச்சி யடைந்தது என்பது நினைத்தற்குரியது.

## அகப்பொருள் பற்றிய செய்யுட்களின் மிகுதி

எட்டுத்தொகை நூல்களிலும், பத்துப்பாட்டிலும் உள்ள செய்யுட்களில், அகப்பொருள் பற்றியவை, ஏறத்தாழ 1850-ம், புறப்பொருள் பற்றியவை, ஏறத்தாழ 500-ம் ஆகும். இவற்றைப் பாடிய புலவர்கள், ஆடவரும் பெண்டிருமாக ஏறத்தாழ ஐந்நூற்றுவர் ஆவர். இவைகளில் அகப்பொருள் பற்றிய செய்யுட்கள் மிகுதியாக இருப்பதற்குக் காரணம், அவை, ஒருவர் பெயர் குறிப்பிடப்படாமல், அவற்றை இயற் றும் புலவர் பெருமக்களின் மனம்போல் மக்கள் மனநிலை களைப் பலவாறு விரிவாகக் கூறுதற்கு ஏற்புடையனவாக இருத் தல் எனவும், புறப்பொருள் பற்றிய செய்யுட்கள் குறைவாக இருப்பதற்குக் காரணம், அவை வரலாற்று உண்மைகளுடன் தொடர்புடையனவாக இருத்தல் எனவும் கருதலாம். எனவே, பழங்காலச் செய்யுட்களில், காதல் உணர்ச்சியை ஓவியமாக்கிக் காட்டும் கவிதைகளையே மிகுதியாகக் காண் கின்றோம்.

ஓரளவு அமைதியும், வாழ்க்கைக்கு அடிப்படையான வாய்ப்புக்களில் நிறைவும் உ,டைய மக்களிடத்தில்தான் காதல்

---

1. ஐங்குறுநூறு என்னும் நூலில் தொண்டிப் பத்து என்னும் பிரிவில் உள்ள பத்துச் செய்யுட்களின் கருத்துக்கள் மட்டும் அகப்பொருட் கிளவி வரிசையில் தொடர்ச்சியாக இருத்தல் குறிப்பிடத்தக்கது.

கவிதைகளும், மற்றைய இலக்கிய ஆக்கங்களும் வளர்தல் கூடும். வயிற்றுப்பசி தணிந்த பின்பு, மக்கள் உள்ளத்தில் எழுந்து ஓங்கி நிற்பது, ஆண் பெண் கூட்டுறவு உணர்ச்சி யாகும். இவ்வுணர்ச்சி, பண்பாடில்லாத மக்கள் கூட்டத்தில் விலங்கு வாழ்வு போன்ற நிலையில் நின்றுவிடும். பண்பாடு அடைந்த மக்கள் இனத்தில், இப் பால் உணர்ச்சி எழுந்து ஓங்கி, எல்லாவற்றையும் இயக்கும் ஆற்றலாக நின்று, அழியாத கவிதைகள், சிற்பங்கள், ஓவியங்கள் முதலானவற்றைப் படைத்துக் கொடுக்கும். எனவே, ஓரளவு அமைதியும், வாழ்க்கைக்கு அடிப்படையான வாய்ப்புக்களில் நிறைவும், பண்பாடும் தமிழ் மக்கள் பெற்றிருந்ததனாலேயே இவ்வளவு உயர்ந்த காதல் கவிதைகள் அக்காலத்தில் தமிழ் மொழியில் தோன்றின என்பது விளங்கும். இக் காதல் கவிதைகளை நோக்குந்தோறும் வாழ்க்கை இன்பங்களைத் துய்த்துக் காணல் வேண்டும் என்ற மனநிலை, தமிழ் மக்களிடத்து இருந்தது என்பதைத் தெளிவாக அறியலாம். இவ்வாறு மக்களிடத்தில் எழுந்த பால் உணர்ச்சியுடன் கூடிய காதல், பிற்காலத்தில் தோன்றிய கடவுட் பாடல்களிலும்[1] இறை உணர்வோடு இணைந்து வெளிப்பட்டது. இது, காலப் போக்கில் இலக்கிய வளர்ச்சியில் நேர்ந்த வேறுபாடாகும்.

## பிரிவு பற்றிய செய்யுட்களின் மிகுதி

அகப்பொருள் பற்றிய, மேற்குறிப்பிட்ட சங்க காலச் செய்யுட்களுள்ளும், தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லுதல் பற்றிய செய்யுட்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. இப் பிரிவு பற்றிய செய்யுட்கள் மிகுதியாக இருப்பதை நோக்கினால், தமிழ் மக்களது காதல் கொள்கையின் அடிப்படையினை நாம் தெளிவாக உணரலாம். தமிழ் மக்களின் காதல் கொள்கை, உடல் உணர்ச்சியை மட்டும் அடிப்படையாகக் கொண்டு எழுந்தது அன்று; உள்ளத்து எழும் உண்மை அன்பு உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. இவ் அன்பு உணர்ச்சி, பிரிவுக் காலத்தில் மிகுதியாக வெளிப்படும்.

---

1. இது, தேவாரம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் முதலிய நூல்களில், இறைவனைக் காதலனாகக் கொண்டு பாடப்பெற்றுள்ள செய்யுட்களைக் குறிப்பதாகும்.

எனவே, பிரிவுதான் அன்பின் உறுதியை அளந்து அறியும் உரைகல்லாகவும், உடல் உணர்ச்சியையும் கடந்து நிற்கும் அன்பு நிலையை விளக்கிக் காட்டும் சுடர் ஒளியாகவும் இருக்கின்றது. பிரிவில், பல பிறப்புக்களிலும் தொடர்ந்துவரும் அன்பு உணர்ச்சியின் முழு உருவமும், முழு விரைவும் புலவர்களால் காட்டப்படுகின்றன. ஆதலால் அகப்பொருள் பற்றிய செய்யுட்களில், பிரிவு பற்றிய செய்யுட்களே மிகுதியாகக் காணப்படுகின்றன.

## புறப்பொருட் செய்யுட்களின் இயல்புகள்

புறப்பொருள் பற்றிய சங்கச் செய்யுட்களில், பெருநில வேந்தரின் பெருமிதமான போர்த் திறங்களையும் வெற்றிச் சிறப்பையும் விரித்துக் கூறும் பாக்கள் பல; குறுநில மன்னர்களைப் பற்றிக் குறிப்பிடுவன சில; வரையாது வழங்கும் வள்ளன்மையை வகுத்துரைக்கும் செய்யுட்கள் பல; பண்டைத் தமிழ் மக்களின் பழக்க வழக்கங்களை அறிவிப்பன பல; நல்லொழுக்கத்தை நவில்வன சில; கல்வியின் மேம்பாட்டினைக் கருத்திற் பதியவைப்பன சில; ஆட்சி முறையை அழகுற எடுத்து இயம்புவன சில; மறக்குடி மகளிரின் மாண்பினைப் புலப்படுத்துவன சில; கற்பரசிகளின் வாழ்வினைக் கவினுறக் காட்டுவன சில; வெஞ்சின வேந்தர் வஞ்சினம் கூறும் பாடல்கள் சில; போரைத் தடுத்து புலவர் அறிவுரை கூறுவன சில; நல்வினை தீவினைப் பயன்கள், இம்மை மறுமை நிலைகள் இவற்றை நினைவூட்டுவன சில ; சிவபெருமான், முருகவேள், திருமால் முதலாய கடவுளரைப் பற்றிக் குறிப்பிடுவன சில; துறைமுகப்பட்டினங்கள், உள்நாட்டு வெளிநாட்டு வாணிகங்கள் பற்றிக் கூறும் பாடல்கள் சில; உலகம் முழுதும் வாழ்தல் வேண்டும் என நினைத்தல், உலகம் முழுதும் உறவு எனக் கருதுதல் முதலிய சீரிய பல பொதுக் கருத்துக்களைப் புலப்படுத்துவன சில.

மேலும் இச் செய்யுட்களில், தமிழக வரலாற்றுக் குறிப்புக்கள் பலவும், தமிழ் நாட்டுத் தலைநகரங்களைப் பற்றிய பல சிறப்புக்களும், வட நாட்டைப் பற்றிய சில செய்திகளும், பிற வரலாற்றுக் குறிப்புக்கள் சிலவும் இடம் பெற்றுள்ளன. சில வரலாற்றுக் குறிப்புக்கள், சங்க நூல்களுள் ஒரு நூலில் அன்றிப் பிற சங்க நூல்களிலும் காணப்படுகின்றன. சங்கச்

செய்யுட்கள், உள்ளதை உள்ளவாறே உரைக்கும் இயல்பின. ஆயினும் சில செய்யுட்களில், கற்பனை சற்று மிகுதியாகவும் காணப்படுகின்றது. சங்க காலப் புலவர்கள், தாம் வாழ்ந்த காலத்தில் நிகழ்ந்த வரலாறுகள் பற்றிய குறிப்புக்களையும், அக்கால மக்களின் பண்பாட்டினையும் தாம் இயற்றிய செய் யுட்களில் அமைத்துள்ளனர். ஆதலால், சங்க இலக்கியங் களில் கூறப்பட்டுள்ள முடிவேந்தர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் முதலானோரைப் பற்றிய செய்திகளும், போர்கள், தலைநகரங்கள், ஊர்கள், மலைகள், ஆறுகள், மக்கள் வாழ்க்கை, கடவுள் வழிபாட்டு முறை, தொழில், வாணிகம் முதலியவை பற்றிய செய்திகளும் கற்பனைகள் அல்ல; இச் செய்திகளைக் கொண்டு, அக் கால மக்களின் வரலாற்றை நாம் ஓரளவு அறியலாம். அக் கால வரலாறுகளை அறிவிப்பதில், அகப்பொருள் நூல்களிலும், புறப்பொருள் நூல்கள் சிறந்தன வாகும். அகப்பொருள் நூல்களிலும் இடையிடையே வர லாற்றுச் செய்திகள் கூறப்பட்டுள்ளன எனினும் மக்களின் காதல் வாழ்வை விளக்குவதே அகப்பொருள் நூல்களின் குறிக்கோளாகும்.

## புறப்பொருட் செய்யுட்களில் வீரத்தைப் பற்றிய செய்யுட் களின் மிகுதி

புறப்பொருள் பற்றிய செய்யுட்கள், மேற்கூறியவாறு, வீரம், வன்மை, அறிவுரை முதலிய அரிய பல கருத்துக்களைக் கூறுவன ஆயினும் அவற்றுள் வீரத்தைப் பற்றிய செய்யுட்கள் மிகுதியாக உள்ளன. முடியுடைப் பெருவேந்தர்களாகிய சேரர் சோழர் பாண்டியர் என்னும் மூவருமே வரலாற்றிற்கு முற்பட்ட மிகப் பழங்காலந்தொட்டு இத் தமிழகத்தை ஆண்டு வந்தவர். ஆயினும் வலிமை மிக்க தொடர்ச்சியாக வரும் பேரரசு நிலவிற்று என்று சொல்லுதல் இயலாது. ஆங் காங்கே ஆற்றல் வாய்ந்த குறுநில மன்னர்கள் பலர், அம் மூவேந்தர்க்கு உட்பட்டும், உட்படாமல் தன்னுரிமையோடும் ஆட்சி நடத்தி வந்தனர். இதனாலும், மூவேந்தர்களுக்குள் இடையிடையே நேர்ந்த மாறுபாடுகளாலும், வட நாட்டு மன்னர்கள் கொண்ட பகையினாலும் தம்மைக் காத்துக் கொள் ளவும், பொருளும் நாடும் புகழும் வேண்டியும் அவ்வப்போது அடுத்தடுத்துப் போர்கள் நடந்துகொண்டிருந்தன. எனவே,

இப்போர்ச் சூழ்நிலைகளால் புலவர்கள், போர் பற்றிய செய்யுட்களை மிகுதியாகப் பாட நேர்ந்தது. அச் செய்யுட்கள், வீர உணர்ச்சியைத் தூண்டும் அழகான பாக்களாக அமைந்துள்ளன. இத்தகைய செய்யுட்கள், அக்காலத்து வரலாற்றுக் குறிப்புக்களை அறிதற்குப் பெரும் துணை புரிகின்றன.

## அகமும் புறமும்

புறப்பொருட் செய்யுட்களில், அவற்றை இயற்றிய புலவர்களின் உணர்ச்சிகள், பெரும்பாலும் அப்புலவர்களே கூறுவனவாக வெளிப்படுகின்றன. அகப்பொருட் செய்யுட்களில், புலவர்களின் உணர்ச்சிகள், உள் நின்று, தலைவன் தலைவி முதலாயோர் கூறுவனவாக வெளிப்படுகின்றன. சங்க காலச் செய்யுட்களின் பெரும்பாலானவை, தம் பயன் கருதாமல் உலகிற்குப் பயன்படும் பொதுநலம் கருதியே புலவர்களால் பாடப்பட்டன. புறப்பொருள் பற்றிய செய்யுட்களில், செல்வம் முதலிய பயன் கருதிப் புரவலர்களைப் புகழ்ந்து பாடப்பெற்ற செய்யுட்கள் உள்ளன. அகப்பொருள் பற்றிய செய்யுட்களில், புரவலர்களைப் புகழ்ந்து பாடப்பெற்ற செய்யுட்கள் சிலவேயாகும். அவையும் சார்த்து வகையால் பாடப்பட்டனவாம். பிற்காலத்தில் தோன்றிய அகப்பொருள் நூல்களாகிய கோவைகளில், ஒவ்வொரு செய்யுளிலும் அப் புலவரைப் பேணிய புரவலர் பாராட்டப் பெற்றுள்ளனர். இவ்வாறு பாராட்டப்படுபவர், பாட்டுடைத் தலைமகன் எனக் கூறப்படுவர்.

இதுவரையும் கூறியதிலிருந்து சங்க காலத் தமிழ்ப் புலவர்கள் காதல், வீரம் என்னும் இரண்டனையும் பற்றி மிகுதியாகப் பாடினர் என்பது தெளிவாகும். ஆகவே, சங்க காலத் தமிழ் மக்கள், மனைவாழ்க்கையை இன்பமாக நடத்துவதிலும், தம் நாட்டைப் பாதுகாப்பதிலும் ஊக்கம் உடையவர்களாய் இருந்தனர் என்று கூறுதல் பொருந்தும்.

